# உமாமஹேச்வர ஸ்தோத்ரம்

(உமா, மஹேச்வரன் இருவரையும் சேர்ந்துத் துதிப்பது.)

**நம: சிவாப்4யாம் நவயௌவ நாப்4யாம்**
**பரஸ்பராச்லிஷ்டவபுர்த4ராப்4யாம்**
**நகே3ந்த்3ரகன்யா வ்ருஷகேத நாப்4யாம்**
**நமோ நம: சங்கர பார்வதீப்4யாம்** 1

மங்கள வடிவானவர்களும் எப்பொழுதும் யௌவனப் பருவங் கொண்டவர்களுமான பார்வதீ பரமேச்வரர்களுக்கு வணக்கம். ஒருவரோடொருவர் அணைத்துக் கொள்ளப்பட்ட சரீரத்தை உடையவர்களும், இமயமலையின் புதல்வியும் காளைமாட்டுக் கொடியரும் மான பார்வதிக்கும் சங்கரருக்கும் வணக்கம்.

**நம: சிவாப்4யாம் ஸரஸோத்ஸவாப்4யாம்**
**நமஸ்க்ருதாபீஷ்ட வரப்ரநா3ப்4யாம்**
**நாராயணே நார்சிதபாது3காப்4யாம்**
**நமோ நம: சங்கர பார்வதீப்4யாம்** 2

மங்களமே வடிவானர்களும் எப்பொழுதும் சுவையான உத்ஸவத்தை உடையவர்களும், தங்களை வணங்குகிற பக்தர்களுக்கு வேண்டிய வரன்களை கொடுப்பவர்களும், மஹாவிஷ்ணுவினால் தொழப்பட்ட திருவடிகளை உடையவர் களுமான சங்கரருக்கும் பார்வதிக்கும் வணக்கம்.

**நம: சிவாப்4யாம் வ்ருஷவாஹநாப்4யாம்**
**விரிஞ்சி விஷ்ண்விந்த்3ரஸுபூஜிதாப்4யாம்**
**விபூ4தி பாடீர விலேபநாப்4யாம்**
**நமோ நம: சங்கர பார்வதீப்4யாம்** 3

மங்கள வடிவானவர்களும் காளை மாட்டை வாகனமாய்க் கொண்டவர்களும், நான்முகன், திருமால், இந்திரன் ஆகியோரால் நன்கு தொழப்பட்டவர்களும், திருநீறும் - மஞ்சள் குங்குமமும் பூசியவர்களுமான சங்கரருக்கும் பார்வதிக்கும் வணக்கம்.

**நம: சிவாப்யாம் ஜக3தீ3ச்வராப்4யாம்**
**ஜக3த்பதிப்4யாம் ஜயவிக்3ரஹாப்4யாம்**
**ஜம்பா4ரிமுக்3யைரபி4 வந்தி3தாப்4யாம்**
**நமோநம: சங்கர பார்வதீப்4யாம்** 4

மங்கள வடிவானர்களும் உலகெல்லாம் ஆள்பவர்களும், உலகத் தலைவர் களும் வெற்றியே உருவானவர்களும், இந்திரன் முதலானவர்களால் வணங்கப் பட்டவர்களுமான சங்கரருக்கும் பார்வதிக்கும் வணக்கம்.

**நம: சிவாப்$^4$யாம் பரமௌஷதா$^4$ப்$^4$யாம்**
**பஞ்சாக்ஷரீ பஞ்ஜராஞ்ஜிதாப்$^4$யாம்**
**ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி ஸ்தி$^2$திஸம்ஹ்ருதாப்$^3$யாம்**
**நமோநம: சங்கர பார்வதீப்$^4$யாம்** 5

மங்களமே வடிவானர்களும் (பிறப்பிறப்பெனும் நோய்க்கு) சிறந்த மருந்து ஆனவர்களும், பஞ்சாக்ஷரம் என்ற ஐத்து எழுத்தாகிற கூட்டில் ஆனந்திப்பவர் களும், உலகத்தை படைத்தல் காத்தல் அழித்தல் ஆகியவைகளைச் செய்பவர்களுமான சங்கரருக்கும் பார்வதிக்கும் வணக்கம்.

**நம: சிவாப்$^4$யாம் அதிஸுந்த$^3$ராப்$^4$யாம்**
**அத்யந்தமாஸக்த ஹ்ருத$^3$ம்பு$^4$ஜாப்$^4$யாம்**
**அசேஷலோகைகஹிதங்கராப்$^4$யாம்**
**நமோ நம: சங்கர பார்வதீப்$^4$யாம்** 6

மங்களமே வடிவானர்களும் மிகவும் அழகானவர்களும், மிகவும் ஒற்றுமை யான இதய கமலத்தை உடையவர்களும், எல்லா உலகிற்கும் நன்மையே செய் பவர்களுமான சங்கரருக்கும் பார்வதித்கும் வணக்கம்.

**நம: சிவாப்$^4$யாம் கலிநாசநாப்$^4$யாம்**
**கங்கால கல்யாண வபுர்த$^4$ராப்$^4$யாம்**
**கைலாஸ சைலஸ்தி$^2$த தே$^2$வதாப்$^4$யாம்**
**நமோ நம: சங்கர பார்வதீப்$^4$யாம்** 7

மங்களமே வடிவானவர்களும் கலி தோஷத்தைப் போக்குபவர்களும், (ஒருபுறம்) எலும்புக்கூடு தரித்து மறுபுறம் சுபமான உடலை உடையவர்களும், கயிலை மலையை இருப்பிடமாய்க் கொண்ட தெய்வங்களுமான, சங்கரருக்கும் பார்வதிக்கும் வணக்கம்.

**நம: சிவாப்யாம் அசுபா$^4$பஹாப்$^2$யாம்**
**அசேஷ லோகைக விசேஷிதாப்$^4$யாம்**
**அகுண்டி$^2$தாப்$^4$யாம் ஸ்மிருதி ஸம்ப்$^4$ருதாப்$^4$யாம்**
**நமோநம: சங்கர பார்வதீப்$^4$யாம்** 8

மங்கள வடிவானவர்களும் அசுபத்தைப் போக்கடிப்பவர்களும், எல்லா உலகிற்கும் மேலானவர்களும், மழுக்க முடியாத (சக்தி பொருந்திய) வர்களும் சாஸ்திரங்களினால் அடைவிக்கப்படுபவர்களுமான சங்கரருக்கும் பார்வதிக்கும் வண்க்கம்.

**நம: சிவாப்4யாம் ரத2வாஹநாப்4யாம்**
**ரவீந்து3 வைச்வாநரலோசநாப்4யாம்**
**ராகாசசாங்காப4முகா2ம்பு4 ஜாப்4யாம்**
**நமோ நம: சங்கர பார்வதீப்4யாம்** 9

மங்களமே வடிவானவர்களும் ரதத்தை வாகனமாயுடையவர்களும், சூரியன் - சந்திரன், அக்னி ஆகிய மூவரையும் கண்களாய்க் கொண்டவர்களும், முழு நிலவுக்கு ஒப்பான முகத்தை உடையவர்களுமான சங்கரருக்கும் பார்வதிக் கும் வணக்கம்.

**நம: சிவாப்4யாம் ஜடிலந்த4ராப்4யாம்**
**ஜராம்ருதிப்4யாஞ்ச விவர்ஜிதாப்4யாம்**
**ஜநார்த3நாப்3ஜோத்3ப4வ பூஜிதாப்4யாம்**
**நமோ நம: சங்கர பார்வதீப்4யாம்** 10

மங்களமே வடிவானர்களும் சடை முடி உடையவர்களும், முதுமையும் இறப்பும் அற்றவர்களும், திருமால் நான்முகன் ஆகிய இருவராலும் தொழப் பட்டவர்களுமான சங்கரருக்கும் பார்வதிக்கும் வணக்கம்.

**நம: சிவாப்4யாம் விஷமேக்ஷணாப்4யாம்**
**பி3ல்வச்ச2தா3ரமல்லிகதா3 மப்4ருத்ப்4யாம்**
**சோபா4வதீ சாந்தவதிச்வராப்4யாம்**
**நமோ நம: சங்கர பார்வதீப்4யாம்** 11

மங்களமே வடிவானவர்களும் நெற்றிக்கண்ணை உடையவர்களும், வில்வத் களத்தையும் மல்லிகைப்பூ மாலையையும் அணிந்தவர்களும், அழகையும் அமைதி யையும் கொண்டவர்களுமான சங்கரருக்கும் பார்வதிக்கும் வணக்கம்.

**நம: சிவாப்4யாம் பசுபாலகாப்4யாம்**
**ஜகத்ரயீரக்ஷண ப3த்3த4ஹ்ருத்2ப்4யாம்**
**ஸமஸ்த தே3வாஸுரபூஜிதாப்4யாம்**
**நமோநம: சங்கர பார்வதீப்4யாம்** 12

மங்களமே வடிவானவர்களும் பசுக்களாகிய (உயிர்களை) காப்பவர்களும் மூவுலகையும் காப்பதிலேயே கட்டப்பட்ட இதயமுள்ளவர்களும், எல்லா தேவர் களாலும் அரக்கர்களாலும் பூஜிக்கப்பட்டவர்களுமான சங்கரருக்கும் பார்வதிக்கும் வணக்கம்.

**ஸ்தோத்ரம் த்ரிஸந்த்4யம் சிவபார்வதீப்4யாம்**
**ப4க்த்யா படே2த்3த்3வாத3சகம் நரோ ய:**
**ஸ ஸர்வ ஸௌபா4க்ய ப2லாநி பு4ங்க்தே**
**சதாயுரந்தே சிவலோகமேதி** 13

# உமாமஹேச்வர ஸ்தோத்ரம்

சிவ பார்வதியினுடைய 12 சுலோகங்கள் கொண்ட இந்தத் துதியை மூன்று ஸ்ந்த்யைகளிலும் படிக்கும் மனிதன் எல்லா பேறுகளையும் அடைந்து நூறு வயது வாழ்ந்து முடிவில் சிவலோகத்தை அடைவான்.

